# சில மரணங்கள்

அந்த வயதான விமர்சகர் என் கனவில் வந்தார். சமீபத்தில் இறந்த கவிஞனின் கடைசிக் கவிதையில் ரத்தத் துளிகள் இருந்தன என்றார். "நான் அதில் சாவைக் கண்டேன்" என்றார். விமர்சகர் கனவில் வருவதில் எந்த ஆட்சேபணையும் இல்லை. அவர் உடை யில்லாமல் வந்தார். அவ்வளவுதான். மென்சிவப்பு உடம்பு. தலை, நெஞ்சு எல்லாம் நரை. அவருடைய உறுப்பின் மேல்பகுதியில் படர்ந்த மயிரும் வெளுத்ததுதான். பின்பகுதி சப்பிப் போயிருந்தது, பல்லில்லா வாய் மாதிரி. அவர் உறுப்பு பழுத்துத் தொங்கியது. தொடையில் எதையோ இறுக்கிக்கொண்டவர்போல் உட்கார, நடக்கச் சிரமப்பட்டார். பழகிய, ஆசைப்பட்ட, மோகித்த, காமுற்ற நண்பர்கள் பலர் இருக்கையில் ஆழ்மனது இவர் அம்மணத்தை ஏன் தேர்ந் தெடுத்தது என்று தெரியவில்லை.

அவர் வசதியாக அமர்ந்தார். கவிஞன் பற்றிய கருத்தைக் கூறிவிட்டு மௌனமாக இருந்தார். சிறிது நேரத்துக்குப் பின் நிதானமாகப் பேசினார்.

"நான் ஒரு முறை மின்வண்டியில் போனேன். இரவு. கடைசி வண்டி. ஒன்றரை மணி வண்டி. என் பெட்டியில் ஒரு மூலையில்தான் விளக்கு இருந்தது. நான் இருந்த பகுதி இருண்டிருந்தது. மின்வண்டி போகும் பாதையிலிருந்த விளக்குகளின் வெளிச்சம் உள்ளே தெறித்த போது மட்டும் சில உருவங்கள் கிளம்பிப் பின் தேய்ந்தன. சில சமயம் விளக்கு வெளிச்சம் அவர்கள் மேல் அலையலையாய்ப் பரவியது. பாய் விரித்தது. சில சமயம், தூங்கும் தலை ஒன்று வெளிச்சத்தினுள் முன்னால் விழுந்து பிறகு இருட்டில் பின்னால் சென்றது. பின் சென்றபோது கழுத்துக்கொட்டை எலும்பு துருத்தியவாறு தெரிந்தது. வெளிச்சக் கதிர்கள் சிலர் தலையில் மட்டும் சிதறின. தலைமயிர் மட்டும் உடலைத் தேடுவதுபோல் அசைந்தது. ஒரு வெளிச்சப் பாய்ச்சலில் ஒரு மூக்குத்தி மட்டும் உயிர்பெற்று நீந்தியது அந்தரத்தில். வெளிச்சப் பகுதியின் மூலையி லிருந்து அவன் எழுந்தான். பாதி வெளிச்சமும் பாதி இருட்டுமான பகுதிக்கு வந்தான். இரண்டு பக்கமும் வெளியே போகும் வழி.

நடுவே அவன். "முடியாது" என்று கத்தினான். "என்னால் இனிமேல் முடியாது" என்று வீறிட்டான். பிறகு நான்கெட்டு இடப்பக்கம் நடந்து வண்டியின் வெளியே போய்விட்டான். வண்டி ஓடிக்கொண் டிருந்தது. அது துரித வண்டி."

என் கண்முன் ஒரு பாறை மலை எழுந்தது. நான் அவரிடம் சொன்னேன். "நாங்கள் மிகப்பெரிய பாறைகளின் மேல் நடந்து கொண்டிருந்தோம். நான், கதிர், ஐம்பது வயது பி.ஸி. ஷா. ஏற, ஏற மேலும் பாறைகள். ஒரு கிழவியும் ஓர் இளம் தம்பதியரும் கீழே வந்து கொண்டிருந்தனர். கிழவி கால் வீங்கியிருந்தது. மலரச் சிரித்தாள். "நீல்கண்ட் மகராஜ் கீ ஜே" என்று முழங்கினாள். ஒரு மைல் ஏறிச் சிறிது இறங்கியபின் ஒரு டீக்கடை இருக்கிறது என்றான் இளைஞன். டீக்கடை டீக்கடை என்றவாறு பாறைகளைக் கடந்தோம். தளர்ந்தபோது 'டீக்கடை' என்று கத்தினார் பி.ஸி. ஷா. பாறைகளின் படிக்கட்டில் திட்டமிடப்பட்ட பாதை ஏதுமில்லை. காலை ஓரங்குலம் உயர்த்தினாற்போல் ஒன்று. தொடையோடு மேலே தூக்கி வைப்பது போல் ஒன்று. பிராணிகள் மாதிரி தவழ்ந்து ஏற வேண்டியது ஒன்று. ஒரு பெரிய பாறையின் கீழ் நீர் கொட்டியது. ஓர் இலை சுருட்டி வைக்கப்பட்டிருந்தது, குழாய் போல. உள்ளங்கையில் நீர் சொட்டச்சொட்ட நாக்கால் அழுந்தத் தேய்த்து, குடித்து ... தலையைத் திருப்பியபோது அது கிடந்தது தெரிந்தது. பசு மாடு. இறந்திருந்தது. அதன் வயிறு உப்பியிருந்தது. சினை மாடு. அதன் வாலின் கீழ், தலை மட்டும் வெளியே வந்த கன்று. இறுகிப்போயிருந்த கணம். முட்டிமுட்டி வெளியே வந்தபோது கவ்விய கணம். ஈரம் படிந்த உள்ளங்கை கன்னத்தைத் தாங்க எட்டும் முன் ஒரு திடீர் பனி மூட்டம் நெருப்பு வேகத்தில் பரவியது. மூக்கைச் சிலீரென்று தொட்டுத் தொப்புளில் குறுகுறுத்தது. பாறைகள் தெரியவில்லை. பசு தெரிந்தது. அதன் நாக்கு நீலமாய் இருந்தது. வெகு அருகில்."

மௌனமாய் இருந்தோம்.

ஏனென்று தெரியவில்லை. அப்பாவின் கால்கள் நினைவுக்கு வந்தன. காலில்தான் அவர் வலிமை எல்லாம். ஜக்ஜக்கென்று நடை. ஷட்டில்காக் ஆடும்போது நொடியில் ஓடி, வலை அருகே உள்ள பந்தைக் கீழிருந்து கவ்வி எடுத்து அடித்துவிடுவார். நன்கு ஓடும் கால்கள். நீளமானவை அல்ல. கொஞ்சம் தடிமனாய், வளைவு இல்லாமல், தூண் மாதிரி. முறப் பாதங்கள். விரிந்து, வீசி, அகலமாய். முழுப் பாதத்தையும் ஊன்றி அழுத்தி ஒரு நடை. அவருடைய முழங்கால் அளவு உயரம் இருந்ததிலிருந்து அந்தக் கால்களை அவள் கவனித்திருந்ததால் அவற்றில் ஓடும் ஒற்றைக் கரும் பச்சைத் தடி நரம்புகூட நினைவிருக்கிறது.

நிறைய விஷயங்களோடு காலை இணைப்பார். கோபம் வந்தால் 'எட்டி உதைப்பேன்' என்றுதான் வசனம். 'தன் காலிலேயே நிக்கிற

சக்தி' என்று அழுத்தமாய்ச் சொல்வார். அந்தக் கடிதத்தில்கூடக் காலைப் பற்றிய குறிப்பு இருந்தது.

“அம்மாவும் நானும் இன்னும் இரண்டு மூன்று வருடங்களுக்குப் பிறகு அங்கே வந்தால் போதும் என்கிறாய். இரண்டு மூன்று வருடங்கள் என்னால் தாக்குப் பிடிக்க முடியுமா என்று தெரியவில்லை. வயது எழுபது ஆகிவிட்டது. ஹெர்னியா தொல்லை வேறு. நடக்கச் சிரமப்படுகிறேன். நீ ஒன்றும் செய்ய வேண்டாம். உங்கள் வீட்டில் எனக்குக் கால் ஊன்றிக்கொள்ள ஒரு சிறு இடம் தந்தால்போதும்...”. கடிதத்தை எழுதிவிட்டு மார்பின் மேல் போட்டுக்கொண்டு காலை நீட்டிப்படுக்கும் சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண்டு ‘க்ஹம்’ ‘க்ஹம்’ என்று உறுமிஉறுமி அழுதார் என்றாள் அம்மா.

அந்தச் சிதையை நன்றாகத்தான் அடுக்கியிருந்தார்கள். அப்பா உயரம் அதிகம். ஒரு கால், விறகுகளை மீறி நீண்டது. மற்ற இடத்தில் தீ பரவியபோது காலின் வெளுத்த அடிப்பாகம் மட்டும் தீ தொடாமல் விலகி நின்றது. பிறகு ஒரு சிறு நெருப்பலை அதைத தடவியது. ஒரு கரும் புகையைப் பூசிச் சென்றது. பிறகு மெல்லமெல்லக் கால் கருகியது.

விமர்சகர் விச்ராந்தியாய் உட்கார்ந்திருந்தார். இன்னும் சௌகரியமாகச் சாய்ந்துகொள்ள, கால்களைத் தூக்கி முக்காலியில் வைத்தார். முக்காலியின் வெளியே ஒரு கால் நீண்டது.

